# ஸ்ரீராமாநுஜன்-384



ஆசிரியர்:
ஸ்ரீ காஞ்சி மஹாவித்வான் P. B, அண்ணங்கராசாரியர்

| தொகுதி 33 | ரௌத்திரி ஹூ ஆவணி மீ 1980 ஆகஸ்ட் மீ | பகுதி 4 |
|---|---|---|


## பத்ராதிபரின் விண்ணப்பம்



**ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம். வீரராகவாசாரியர்ஸ்வாமியை உத்தேசித்துச் செய்யுமிந்த விஜ்ஞாபனம் ஸ்ரீவைஷ்ணவ வுலகம் குறிக்கொள்ள.**

மேலே குறித்த ஸ்வாமியின் திருநாமத்தைக் குறிப்பிடாமல் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ரிகையிலும், திருநாமத்தைக் குறிப்பிட்டே பலகால் ஸ்ரீராமாநுஜனிலும் வெளிவந்த வியாஸங்களைப் பெரும்பாலும் வாசித்திருக்கின்றது உலகம். நாம் ஜிகீஷயாவன்றிக்கே ஜிஜ்ஞாஸயா வெளியிட்டிருக்கும் பலபல கேள்விகளுள் ஒன்றுக்கும் உத்தரமுரைப்பதில் ருசி கொள்ளாமல்

மேன்மேலும் நிந்தைகளையேபொழிந்து ஸ்ரீமுகங்கள் ஸாதித்து வருகிறார் அந்த ஸ்வாமி. அவற்றுக்கு நாம் விடையிறுக்க விரும்பவில்லை. ஒரு சிறு கடிதம்மட்டும் எழுதினோம், அதாவது;— "தேவரீர் ஒரு வித்வானென்று பெயர் பெற்றிருந்து இங்ஙனே நிந்தைக்கந்தைகளை விடுப்பது அழகிதன்று; எனது கேள்விகள் ஜிஜ்ஞாஸயாவன்றிக்கே ஜிகீஷயாவாகவே யிருந்தாலும் உலகம் தெளிய விடையிறுக்க வேண்டியது மிகமிக முக்கியமானது. "இன்னாருடைய கேள்விகளுக்கு விடை" என்று காட்டவும் வேண்டா, லோகாபிராமமாக எழுதும் வழிகள் பலவுண்டே. அப்படியெழுதி ஸ்ரீ ரங்கநாதபாதுகாதிகளில் வெளியிட அனுப்பினால் உகந்து ஏற்று வெளியிடார்களோ? ஏகாந்தமாக எனக்குக் கடிதமெழுதி அலப்யமான வார்த்தைகளை நிரப்புவதனால் என்ன லாபம்?" என்று எழுதியும் பயன்படவில்லை. 4 பக்கங்களும் 5 பக்கங்களும் எழுதியனுப்புகிறார். "அப்படி நான் ஒன்றும் எழுதுவதில்லை, இது பொய்யுரை" என்று வெளியிட்டுவிட்டால் இவருடைய கையெழுத்துக் கடிதங்களை மடாதிபதிகள் முன்னிலையில் பிரசுரப்படுத்தியே தீருவோம். கிழித்தெறிந்த கடிதங்கள் போக, சேமித்திருப்பவற்றைச் சபைகளில் வெளியிடுவோம்.

வசவுகளைப் பொழிந்து ருப்தியடையவேணுமென்று இவர்க்கு ஆசையிருந்தால், மஹானை தமது திருக்கையாலன்றிக்கே சில பையல்களைக்கொண்டு எழுதுவித்து க்ருதக்ருத்யராகலாம். காப்பாற்றி வைத்திருக்கும் இவரது கடிதங்களில் மணவாள மாமுனிகள் பிள்ளைலோகாசாரியர் முதலானாரைப்பற்றின அஸஹ்யாபசாரமொழிகளே மலிந்துள்ளன. அக்கடிதங்களை நாம் கிழித்தெறியாமல் சேமித்து வைப்பதும் மஹாபசாரமென்னத்தட்டில்லை. சென்ற மாதத்து ஸ்ரீராமாநுஜனில் பிரசுரம் செய்யப்பட்ட இவரது கார்டு ஒன்றில் "**ம்ருத்யு மத்யஸ்தோஸ்மி**— பிரமாணம் செய்யக் காத்திருக்கிறேன்" என்றெழுதியது போல, ஸ்ரீ ராமாநுஜ பத்ராதிபருக்கு நான் 4 பக்கம், 5 பக்கம் கடிதங்களெழுதினதுமில்லை, (அவர் தெரிவிப்பதுபோல்) தென்னாசாரியர்களை ப்ரஸ்தாவித்து இழிவாகவோ பழிப்பாகவோ யதொன்றும் எழுதினதுமில்லை" என்று பிரமாணம் செய்ய ஸித்தனாயிருக்கிறேன் என்று பிரசுரம் செய்யட்டும் துணிவுண்டாகில். அதுவே இவர்க்கு நிஷ்க்ருதியாகும்

# ஓர் புராதனச்செய்தி

முப்பதாண்டுகட்கு முன்பு (1950ஆம் ஸூத்தில்) **ஸ்ரீதேசிக ஸஹஸ்ரநாமம்** என்றொரு க்ரந்தம் ஸ்ரீ கோபாலதேசிகன் க்ருதியாக ஸ்ரீ காஞ்சீ அச்சுக்கூடத்தில் அச்சிடப்பெற்று வெளிவந்தது, அதற்கு ஸ்ரீ ராமாநுஜனில் விமர்சம் வெளியிடநேர்ந்தது, அதிலுள்ள அநேகவிதமான அஸாது ப்ரயோகங்களை விளக்கி, இது மஹாவித்வானாகப் புகழப்படுகிற ஸ்ரீ கோபாலதேசிகனுடைய க்ருதியாக இருக்க ஔசித்யமில்லை யென்றது விமர்சஸாரம். அதில் நம் மதுராந்தகவித்வான் தலையிட்டு ஏதோ எழுதியிருந்தார். அதற்குமேல் **ஸ்ரீ தேசிக ஸஹஸ்ரநாம விமர்சம்** என்னும் நூல் அடியேனால் வெளியிடப்பட்டது. அஃது இரண்டு ஆஹ்நிகங்கொண்டது அந்நூலில் இவர் அடைந்த பங்கம் முப்பது வருஷமானாலும் ஒருவர்க்கும் மறந்திராது அது கிடக்க. அதில் இரண்டாம் ஆஹ்நிகத்தின் தொடக்கத்திலுள்ள விஷயங்கள் இங்கு அவசியம் அநுவதிக்கத்தக்கவை யென்று தோன்றினபடியால் உலகங்காணவே அவை அநுவதிக்கப்படுகின்றன. ஸ்ரீராமாநுஜனை ஆதியிலிருந்துசேமித்து வைத்திருப்பவர்கள் அதிலும் பார்க்கலாம். அதிலிருந்து தனிப்புத்தகமாக ஆக்கப்பட்ட நூல் [முப்பது பிரதிகள்] நம்மிடமுண்டு. அபேக்ஷகர்களுக்கு (அரை ரூபாய் ஸ்டாம்ப் அனுப்பினால் இனமாக அனுப்பப்படும்.

நமது தமிழ் நாட்டிலுள்ள உபய ஸம்ப்ரதாயஸ்தர்களும் [ஏறக்குறைய ஐந்நூறு வ்யக்திகள்] நமது வெளியீடுகளை அநுபவித்துவருவது வழக்கமாதலால், அவர்களில் ரஸிகர்களும், பண்டிதர்களுமாகவுள்ளவர்கள் தாங்கள் அநுபவித்த அம்சங்களை அப்போதைக்கப்போது ஹர்ஷப்ரகர்ஷத்துடன் தெரிவியாமலிருப்பதில்லை. இங்ஙனம் தெரிவிப்பவர்கள் உபய ஸம்பிரதாயஸ்தர்களுமேயானாலும், ஸ்ரீவரவரமுநி ஸம்பிரதாயஸ்தர்கள் சிலரேயாகவும், ஸ்ரீ தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களே பலராகவும் தேறுவர்கள். இது வஸ்துஸ்திதியுரைத்தலே யொழிய ஆத்ம ப்ரசம்ஸோக்தியன்றென்பதை இதனை வாசிக்குமவர்களின் உள்ளமே யுணரும் அறுபது வருஷங்களுக்கு மேலாக நம்முடைய வெளியீடுகள் பத்ரிகா ரூபேணவும் புஸ்தக ரூபேணவும் பிரசுரமாகி வருவதனால் அந்நாள் தொடங்கியே ரஸிக பண்டிதோத்தமர்கள் ஆத்மவஞ்சனையில்லாமல் தம்

தம் உள்ளத்தில் தோன்றும் உகப்பைப் பரவசர்களாய்த் தெரிவித்து வரு வது பெரு பாலும் தினப்படியாகவே நிகழும் நிகழ்ச்சியாகும். தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களாக வழங்கப்படுமவர்களின் உள்ளம் கன்றும்படியாக வும் நாம் சில பல நூல்களை எழுத நேருவதுண்டாதலால் அவற்றையுங் கூட அவர்கள் கொண்டாடித் தெரிவிப்பர்களோவென்று சிலர் கேட்கக் கூடும். நாம் எழுதுகிற விஷயங்கள் ப்ரமாணஸரணியைச் சிறிதும் கடவாமல் ஸம்ப்ரதிபந்நங்களாயிருந்தால், அவற்றைப் பார்ப்பவர்கள் ஆத்ம ஸாக்ஷ்யத்தை வஞ்சிக்கமாட்டாத ப்ராமாணிகர்களாயே யிருந் தால், ஹ்ருதயத்தில் தோன்றும் ஹர்ஷமும் அபரிமிதமாயிருந்தால் அவர்கள் கொண்டாடித் தெரிவிப்பதில் என்ன வியப்பு? விஷயதத்வங்கள் நெஞ்சில் பட்டாலுங்கூட அந்தரங்க ஸாக்ஷிகமான ஆனந்தத்தை மாச்சரியத்தினால் அபலபித்து தூஷிப்பவர்கள் அடியோடு இல்லையென்று நாம் சொல்லுகின்றிலோம் அப்படிப்பட்டவர்களும் சிலருளர். லௌகிக தாக்ஷிண்யாதிகளாலே சித்த வ்ருத்தியை வெளிக்காட்டிக் கொள்ளகில் லாதவர்களும் சிலருளர். உலகர்களின் நிலைமை ஒரேவிதமென்று யாரே அனுப்பினால் சொல்லவல்லார்?

'களவு செய்தால் கண்டிப்பாகப் பிடிபடுவோம், பொய்சொன்னால் பங்கப்பட்டே தீருவோம்' என்று நன்கு அறிந்திருப்பவர்களுக்கும் விதி வசத்தாலே களவுத் தொழிலும் பொய் சொல்லுதலும் ப்ராப்தமாகிருப் போலே. ''அசைக்கவும் முடியாதபடி யெழுதப்படுகிற அண்ணங்கரா சார்ய க்ரந்தங்களுக்குக் கண்டன மெழுதினால் அடுத்த நாளே அலமந்து நிற்போம்'' என்பதை உள்ளபடி யுணர்ந்தவர்களுங்கூட *அலுப்த மூர்த் தந்ய லிபிக்ரமா அமீ* என்னும்படியான தன்மையினால் ஸஹஸா கண் டன மென்று ஒன்றை யெழுதிவிட்டுத் திணறி நிற்பதையுங் கண்டிருப் துண்டே. ஆகவே நமது நூல்களை எல்லாருமே அவிசேஷேண கொண் டாடுகிறார்களென்று நாம் சொல்லகில்லோம், பிறருடைய கண்டனம் ஏறும்படியாக ஓரக்ஷரமும் எம்பெருமான் நம்மைக்கொண்டு எழுதுவிப்ப தில்லை யென்பதை மட்டும் துணிந்து சொல்லவல்லோம்.

நம்முடைய நூல்கள் அஸங்கதார்த்த கண்டனங்களினாலும் ஸுஸங்கதார்த்த நிருபணங்களினாலும் உலகுக்கெல்லாம் உபகாரமாக அமையவேண்டுமென்றும், கொண்டாட விரும்பாதவர்களான விபக்ஷர்

களுங்கூட அவற்றைக் கொண்டாடும்படியான பாக்கியம் விளையவேணு
மென்றும் ஆசைப்படுவது தகுதியற்றதன்று. இப்படிச் சிலர் ஆசைப்
பட்டால் அவ்வாசை நிறைவேறப் பெறுவதாகத் தெரியவில்லை, என்
னுடைய அநுபவத்தை நான் நிஷ்கபடமாகத் தெரிவிக்கிறேன் கேண்
மின் என்னுடைய கண்ணில்படும் வியாஸங்களிலோ நூல்களிலோ
அஸங்கதங்களான விஷயங்களிருந்தால், 'இவை அஸங்கதங்களே' என்
கிற நிச்சயமுமுண்டானால் அவற்றை உலக நன்மைக்காக மறுத்திடாம
லிருக்க முடிகிறதில்லை ஸங்கதங்களையும் அஸங்கதங்களாக மருண்டு
மறுப்பு வெளியிட்டு விட்டானிவன்—என்கிற அபக்க்யாதியை அடியேன்
இதுகாறும் அடைந்ததில்லை. மஹர்ஷி யென்று மதிக்கப்பட்டுவந்த
(வைகுண்டவாஸியான) ஸ்ரீமதுபயவே (மாம்பலம்) வாஸுதேவாசார்ய
ஸ்வாமி ஒருவர்க்கும் அஞ்சாதவராய், அந்தரங்க ஸாக்ஷ்யத்தை அப
லபிக்கமாட்டாதவராய் அடியேனுடைய மறுப்பு நூல்களைப் பற்றியுங்கூட
எவ்வளவு அபிநந்தநங்களை வெளியிட்டிருக்கிறா ரென்பதை ஞாபக சக்தி
யுள்ள ஞானிகள் மறந்திரார்கள். இல்லை செய்யப் போகாதபடி அவை
வேதாந்ததீபிகையிலும் ந்ருஸிம்ஹ ப்ரியாவிலும் ஸ்தாவர ப்ரதிஷ்டை
பெற்றுமிருக்கின்றனவே மறைந்து போன அந்த ஸ்வாமியின் விஷயம்
நிற்க;

திருவரங்கம் பெரிய கோயிலில் இப்போது ஆண்டவன் ஆஸ்தா
னத்தை அலங்கரித்தருளாநின்ற ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி தென்பரை
யாண்டவன் ஸ்வாமியோடு அடியேனுக்குப் பரிசயமின்றிக்கே நேரில்
ஸேவிக்கப் பெற்றதுமின்றிக்கே பத்ரவ்யவஹார ப்ரஸக்தியுமின்றிக்கே
யிருந்த நாளில் (அதாவது 1951௵ முடிவில்) அந்த ஸ்வாமி ஸன்னிதி
யிலிருந்து அசிந்திதமாகக் கிடைத்த ஒரு ஸ்ரீமுகத்தில் "தேவரீருடைய
க்ரந்தங்களையும் வாக்விலஸிதங்களையும் ஸ்ரீ ஸ்வாமி கடாக்ஷித்தும் கேட்
டும் மிகவும் உகந்தருளும்படி யாச்சுது. தேவரீருடைய க்ரந்தங்களை
யெல்லாம் கடாக்ஷிக்க மிகுந்த குதூஹலமுண்டாகி யிருக்கிறது; அப்
போதைப்போது அனுப்பிக் கொண்டிருக்கும்படியாக நியமனம்'' என்று
ஸ்ரீ கார்யதுரந்தரரால் எழுதப்பட்டிருந்தது, அந்த நியமனத்தை சிரஸா
வஹித்து ஸ்ரீ ஸ்வாமியின் ருசியை யுணர்ந்து பத்தெட்டு க்ரந்தங்களை
மட்டும் அனுப்பியிருந்தேன். வாதக்ரந்தங்களைக் கடாக்ஷிக்கவே ஆண்ட

வனுக்குத் திருவுள்ள மென்று தெரிந்துகொண்டு அவையும் சில அனுப்பி யிருந்தேன். அவற்றை யெல்லாம் கடாக்ஷித்தருளி அடுத்த வாரத்தி லேயே அநுக்ரஹித்தருளின ஸ்ரீமுகம் அப்போதே பத்ரிகைகளிலும் சில நூல்களிலும் பிரசுரமாகியுள்ளது.

"ஸ்ரீஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதீத்யாதி பிருதாலங்க்ருதாநாம் ப்ரதிவாதி மத்தகஜபயங்கர கண்டீரவாணாம் ஸ்ரீகாஞ்சீ நிவாஸிநாம் ஸ்ரீமதாம் அண்ணங்கராசார்யாணாம்—வாதப்ரதிவாத க்ரந்தஜாதம் அநிகதம். ஸ்ரீமதார்யவர்யாணாம் கடாக்ஷபாத்ரஞ்ச அபவத் ஸர்வம் ஆநுபூர்வ்யா கடாக்ஷிதவந்தோ மஹா குருவராஸ் தே அமந்தாநந்த துந்திலஸ்வாந்தாஸ் ஸந்த ஏவம் ப்ரசசம்ஸு:;—

பஹு ஸுதர்க்க ஸச்சாஸ்த்ராநு ஸாரிப்ரமாண யுஞ்ஜமஞ்ஜுளிந் ஸஹ்ருதய ரஸிக ஸுஹ்ருத்ரஞ்ஜக நிரதிசயாச்சர்யசைலீப்ரகும்பித வசநமணி மாலாலங்க்ருதாந் தர்சநாவஸரேஷு நவம் நவமப்யுந்ஸாஹஜநகாந் விவித விசித்ர விஷயவர்க்காந் தர்சம் தர்சம் நிரவதிகதுஷ்டிம் அலபந்த. ஏவ மேவ யுஷ்மாகம் சஷமாயுரபி நித்யநிரவத்ய கைங்கர்யோபயுக்த தேஹாரோக்ய தந தாந்ய ஸம்ருத்திசாலீ பூயாதிதி ஸ்ரீரங்கநாயிகா ஸமேதம் ஸ்ரீரங்கநாத பரப்ரஹ்ம புந: புந: ப்ரார்த்தயே இதி"

இந்த ஸ்ரீமுகம் முப்பதாண்டுகட்கு முந்தியது என்பதையும், ஸ்ரீமத் தென்பரையாண்டவன் வாழ்ந்தருளுங் காலத்திலேயே ஸ்ரீராமாநுஜனிலும் வைதிகமநோஹராவிலும் மற்றுஞ்சில தனி நூல்களிலும் பிரசுரம் செய்யப்பட்டுள்ளதென்பதையும் உலகமறியும். தவிர, வர்த்தமாந ஸ்ரீமதாண்டவன் திருவுள்ளம் நன்கறியும், ஸ்ரீமுகத்திலுள்ள வாக்ய ரசனைகளைக் காணும்போது வர்த்தமாந ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீஸூக்தியா யிருக்குமென்றும் அக்காலத்தில் பலர் சொல்லிக் கொண்டார்கள். இந்தப் பழங்கதைப் பரப்புகள் நிற்க.

ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமி ப்ராப்தமான விஷய சர்ச்சைகளை அறவே விட்டொழித்து நிந்தாத்யாயத்தில் இறங்கினது மிகவும் சோசநீயம். ஸமீபகாலத்தில் அவர் அடியேனுக்குச் சில கடிதங்கள் வரைந்துள்ளாரென்று கீழே தெரிவித்திருக்கிறேன், சுருக்கமாகக் கடிதமெழுதுவ

தென்பது அவர்க்குத் தெரியவே தெரியாதுபோலும். ஒவ்வொன்றும் நீண்ட காகிதத்தில் ஐந்தாறு பக்கங்களாக வளர்ந்துள்ளது. அவற்றுள் ஒன்றையாவது இங்கு வெளியிடலாமென்று பார்த்தேன். அதை வாசித்தால் பாலிசனும் ஜுகுப்ஸைப்படுவன் என்று உடனிருக்கும் அன்பர்கள் கூறினபடியால் அந்த ப்ரவ்ருத்தியை விட்டிட்டேன். ஆனாலும் ஸ்ரீரங்க வாஸிகளில் சிலராவது அக்கடிதத்தை வாசித்துப் பார்க்கட்டுமென்று ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி ஸன்னிதி ஸ்ரீகார்ய தர்சிக்கு அனுப்பியுள்ளேன். விருப்பமுள்ளவர்கள் சென்று கடாக்ஷிக்கலாம். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சந பத்ராதிப ஸ்வாமி ஸன்னிதியிலிருந்து நேற்று கிடைத்த ஸ்ரீமுகத்தினுல், மதுராந்தகம் ஸ்வாமி தலைவேதனையான கடிதங்களை அந்த ஸ்வாமிக்கும் எழுதிக்கொண்டிருப்பதாகத் தெரியவருகிறது. வம்புதும்பு கடிதங்களை ஓயாமல் எழுதிக்கொண்டிருக்குமிவர்க்கு ஜிஜ்ஞாஸித விஷயங்களின் விடையாக இரண்டொரு ஏடாவது எழுதத்தோன்ருதது வியப்பே. "சரக்கிருந்தால் வெளிப்படாதா?" என்கிருர்கள். இவருடைய மிக நீண்ட கடிதங்களுக்குச் சுருக்கமாக நாலு வார்த்தையே நாம் பதிலெழுதிவருகிறோம்;— "ஸ்வாமிந்! தேவரீர் எழுதியருள்வதை ஸ்ரீ ந்ருஸிஹப்ரியாவிலோ ஸ்ரீரங்கநாத நாத பாதுகையிலோ வெளியிடுவித்தால் உலகமெல்லாம் வாசித்துக் களிக்குமே, உங்கள் ஸம்பிரதாயத்தில் எத்தனை வித்வான்களில்லை; ஒருவராவது இப்படி அக்கிலிபிக்கிலியாக எழுதுவார் உண்டா? தேவரீர் திருவையாற்றுக் கலாசாலையிலிருக்கும்போதே "மதுருந்தஹம் யீ வீரருகவாச்சாறியர்" என்று கையெழுத்திட்டுக் கொண்டிருந்ததை இப்போது பலர் எடுத்துரைக்கக் கேட்டு வருகிறேன்—என்று. இனிமேல் அந்த ஸ்வாமி வம்புதும்பு கடிதங்களை எழுதமாட்டரென்று நம்புகிறேன், கேட்ட விஷயங்களுக்கு விடையிறுக்கும் முயற்சியையுங்கொள்ள மாட்டாரென்பது திண்ணம். ...

## இரு நண்பர்களின் ரமணீயமான கடிதங்கள்

சென்னை—க்ரோம்பேட்டையில் புருஷோத்தமநகரில் ஸ்ரீமான் உ. வே. K. A. பார்த்தஸாரதி ஐயங்காரென்பவரும், மதுரைப்ராந்தத்தில் மடிச்சியம் என்னுமூரில் போஸ்டு மேஸ்டராக இருந்துவரும் உவே. J. சேஷாத்திரி ஐயங்கார் என்பவரும் நமக்கு நெடுநாளைய நண்பர்கள்.

முதல்வர் தென்னாசார்ய ஸம்பிரதாயஸ்தர்; இரண்டாமவர் வடகலை ஸம் பிரதாயஸ்தர். இருவரும் பரமரஸிகர்கள். நமது ஸ்ரீ ராமாநுஜனை ஆதியிலிருந்தே அநுபவித்து வருபவர்கள் அதில்காணும் விஷயங்களைப் பற்றி அப்போதைக்கப்போது தங்கள் உள்ளத்தில் தோன்றுமவற்றை நமக்கு எழுதிவருபவர்கள். மேற்குறித்த நண்பர்கள் இருவரும் ஒரு வரையொருவர் சந்திக்க ப்ரமேயமில்லை; ஆனாலு இருவருடைய கடி தங்களையும் நோக்குமிடத்து உண்மையாக இருவரும் ஒன்று சேர்ந்தே கடிதங்கள் எழுதுவதாக நினைக்கலாகிறது. ப்ரக்ருதம் மதுராந்தகம் ஸ்வாமியின் கடிதங்களினால் புண்பட்ட பாவியேனது நெஞ்சுக்கு இவ்விரு வரின் கடிதங்களும் ஆப்யாயனங்களாயிருந்ததனால் இந்த மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்ளாமலிருக்க முடியாமல் இது விஜ்ஞாபித்தபடி. முதல்வரான ஸ்ரீ பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமிக்கு நேராகவும் கடிதங்கள் எழுதிவருவதாக அறிகிறோம். ... ※

## ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியோடு நிகழும் விவாதம் இத்தோடு சாந்தி பெறுமாக

இந்த ஸ்வாமியோடு அடியேனுக்குண்டான நட்பு நாற்பது வரு ஷங்களுக்கு மேலானது. இடையிடையே வாதவிவாதங்கள் நேர்ந்தா லும் ஸ்நேஹாநுவ்ருத்தியில் குறையில்லை யென்பதை உலகம் பெரும் பாலுமறியும். அந்த ஸ்வாமிக்குமேல் அடியேனுக்கு ஒன்பது பிராயங் களாயின. ஸ்ரீராமாநுஜனில் இத்தகைய விவாத விஷயங்களை வாசித்து அறியக்கூடியவர்கள் நூற்றுவராவது தேறக்கூடும். அன்னவர்கள் தென்னாட்டில் மட்டுமன்றிக்கே ஹரித்வாரபர்யந்தமான வடநாட்டிலும் நிரம்பியுள்ளார்கள். அவர்களெல்லாரும் வாசித்துப் பார்த்து "இந்த விவாதங்கள் எப்போது சாந்திபெறுமென்று கேட்கிறார்கள். விவாத விஷயங்களின் ஸ்வரூபத்தையறியாதவர்களும் ஸாமாந்யமாக விவாத மென்றறிந்து அதற்கு சாந்தியை விரும்புகிறார்கள். அவர்களுக்கெல் லாம் விடையளிக்க வெட்கமாகவே யிருக்கிறது.

அன்பர்களே! மேலே எழுதத்தொடங்குகையில், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஆவணிமாதப் பத்திரிகை ப்ராப்தமாயிற்று. அதில் (ராப் பர் நான்காவது பக்கத்தில் —''சென்ற இதழில் அருவருக்கத்தக்க நிந்தைக்கந்தை யென்னும் தலைப்பில் பேத ஸாம்ராஜ்யமென்னும் பெயருள்ள வோர் சுவடிபற்றி யெழுதும்போது, எழுத்தின் நடை, விஷயங்கள் முதலானவை..........ஸ்ரீரங்கத்திலிருக்கும் ஓர் பிரபல வித்வானே இதையெழுதியவரென்று காட்டுகின்றன வென்று நாம் எழுதியிருந்தது கண்டு, இது தம்மையே குறிக்கின்றது என்று உணர்ந்து, ஸ்ரீரங்கத்தில் வாழும் தேசிக ஸம்ப்ரதாயஸ்த வித்வான்களில் பிரபலராக விளங்கும் ஸ்ரீ உவே. மதுராந்தகம் வீரராகவாசார்ய ஸ்வாமி ''அந்நூலைத் தாமெழுதவில்லை யென்று சபதமிட்டு ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளைகள், லோகாசார்யர், ஸ்ரீமணவாளமாமுனிகள் போன்ற மஹநீயர் திருவடிகளில் ப்ராவண்யம் பெற்றவனே யன்றி அபசாரப்படுமவனல்லேன்'' என்றும் எழுதி யுள்ளார். ஆகையால் -...நாம் எண்ணியதை மாற்றிக் கொள்ளுகிறோம்'' என்றுள்ளதைக்கண்டு களித்தேன். [இதில் ஒரு வியப்பு] மேலே குறித்த ஸுதர்சந பத்ராதிபஸ்வாமி வாக்கியத்தில் ''ஸ்ரீரங்கத்திலிருக்கும் ஓர் பிரபல வித்வானே இதையெழுதியவரென்று காட்டுகின்றனவென்று நாம் எழுதியிருந்ததைக்கண்டு, இது நம்மையே குறிக்கின்றதென்று (எண்ணி) என்றெழுதாமல் (உணர்ந்து) என்று எழுதப்பட்டிருப்பதைச் சிறிது குறிக்கொண்டேன். எண்ணி யென்பதும் உணர்ந்து என்பதும் பர்யாயமென்று அந்த ஸ்வாமி எண்ணியிருக்கலாம். அடியேனுடைய அற்பபுத்தியில் ''தத்துவத்தையுணர்ந்து'' என்றதாகப்பட்டது. மனத்தில் பட்டதை எழுதியதற்காக க்ஷமையைப் பிரார்த்திக்கிறேன் ஜ்ஞானசீலவயோவ்ருத்தரான மதுராந்தகம் ஸ்வாமி யெழுதியதைநம்பி அடியேனும் அவரை ஆசார்யாபசாரமே வடிவெடுத்தவராக எண்ணியிருந்த எண்ணத்தை விட்டுவிடுகிறேன். அந்தஸ்வாமி அடியேனுக்கெழுதிப் போஸ்டு செய்திருக்குங் கடிதங்களில் விசிஷ்ய மணவாளமாமுனிகள் திருவடிகளில் அவர்பட்டிருக்கும் அபசாரங்கள் அபலபிக்கமுடியாதவை. *பொய்யேகைம்மை சொல்லி மெய்யே பெற்றொழிந்தேனென்கிற கணக்கிலே அவர் ஸுதர்சந பத்ராதிபஸ்வாமிக்குப் பொரிபுறந்தடவி எழுதியிருந்தாலும், அவருடைய அபசாரங்களை மணவாள மாமுனிகள் திருவுள்ளத்தில் சிறிதுங்கொள்ளார் என்று விட்டிட்டு மேலே செல்லுகிறேன்.

ஏறக்குறைய முப்பத்தைந்து ஆண்டுகட்குமுன்பு தொடங்கி இந்த
ஸ்வாமியை நோக்கியும் மற்றுஞ்சில ஸ்வாமிகளை நோக்கியும் அடியேன்
ஜிஜ்ஞாஸயா கேட்டிருக்கிற கேள்விகள் க்ரந்தாருடங்களாயிராநின்றன.
ஒன்றிரண்டு க்ரந்தங்களல்ல. அவற்றில் பல கேள்விகளுக்கு விடை
வாராதென்று பலர் கூறினபடியால் அவற்றில் சிலவற்றைக் கீழே அநு
வதித்துவிட்டு, மிக முக்கியமாக ஒரு விஷயத்தைமட்டும் விஜ்ஞாபித்து
முடிக்கிறேன்.

1. ஸ்வாமிதேசிகன் ஸாதித்த ஸச்சரித்ரரக்ஷையில் மூன்றாமதிகாரத்
தில் ''மஹாதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலிதேஅநலே'' என்கிற
ஸ்ரீராமாயணச்லோகத்தை விசாரிக்கத்தொடங்கி இங்கு பார்வதீபதி
யான மஹாதேவனைக்குறித்து ஹோமம் செய்ததாகத் தெரியவருகிறதே
யென்று சங்கித்து ''ஸமஸ்த ப்ரயோகமிருந்தால்தான் ருத்ரபோதம் வரு
மென்றும், இங்கு வ்யஸ்தப்ரயோகமிருப்பதால் அது வாராதென்றும்
எழுதியருளி, தாமே பாதுகாஸஹஸ்ரத்தில் ருத்ரவிவக்ஷயா ''நமதி
மஹதி தேவே'' என்று வ்யஸ்தப்ரயோகம் செய்தருளியிருப்பதை எப்படி
நிர்வஹிப்பது? ''ஸ்ரீராமாயணத்தில் (மஹாதே தேவாய) என்றில்லாமல்
(மஹாதேதைவ தாய× என்றிருப்பதால் ருத்ரப்ரதீதிவாராது'' என்று
எழுதியிருந்தால் கேள்வியில்லை; ''வ்யஸ்தப்ரயோகத்தில் ருத்ரப்ரதீதி
வாராது'' என்றெழுதி முடித்திட்டு, தாமே சிவனைக் குறித்து வ்யஸ்த
ப்ரயோகம் செய்திருப்பது பரஸ்பரவிருத்தமென்று தோற்றநின்றதே!
எப்படி பரிஹாரம்! என்று ஜிஜ்ஞாஸை, பாதுகாஸஹஸ்ர ஸச்சரித்ர
ரக்ஷைகளின் பௌர்வாபர்யத்தை நிர்ணயிக்கக்கூடிய ப்ரமாணமிருந்
தால் அதையும் அறிவிக்கவேணும் என்பது. இது இப்போது விடப்பட்ட
கேள்வி.

2. ''(விச்வேதேவார்த்தே) இத்யாதிகளில் அலுக்ஸமாஸம்
சாஸ்த்ரஸம்மதம்'' என்றெழுதியருளினார் ஸ்வாமிதேசிகன். தர்ம
சாஸ்த்ர க்ரந்தகாரர்களில் அர்வாசீநரான ஒருவர் (அத்ர கேசித்மந்தா:
என்றுதொடங்கி அதை தூஷித்திருக்கிறார் ஸுதீவிலோசநத்தில். ஸ்ரீமத்
ரஹஸ்யத்ரயஸாரத்தில் ×இதி மந்தைரிதம் ப்ரோக்தம்× என்று மந்தர்
களென்றோ மூர்க்கர்களென்றோ) தூஷிக்க ஸ்வாமிதேசிகனுக்கு ஹக்கு
உண்டேயல்லது இவரார் தூஷிப்பதற்கு? என்று ஒருவர் எழுதியிருப்
பது ப்ரஸித்தம்.

×விச்வே தேவார்த்தே×என்ப
இந்த சர்ச்சையில் ஒரு ஆச்சரியம். ஸமர்த்திக்க முயன்ற
தில் அலுக்ஸமாஸமென்று தேசிகர் ஸாதித்ததை எழுதியிருந்தார்
(Late) புத்தங்கோட்டம் வித்வான் ஒரு சிறு சுவடி வித்வானும் கண்
அதை ஸ்ரீமத் D. T தாதாசார்யரும், வேளியநல்லூர் அதைக்கண்ட
டித்து உத்யாநபத்திரிகையில் எழுதியிருந்தார்கள். எழுதினல் என்ன
புத்தங்கோட்டம் வித்வான் 'நம்மவர்களே இப்படி இதெல்லாம் நம்
செய்வது'' என்றழுதுவிட்டுக் கையொழிந்தார். ஸம்ஸ்க்ருதநூலில்
முடைய "ரக்ஷாவிலோசநபாவப்ரகாசிகா'' என்னும் அறவே விட்
விசதமாகக் காணத்தக்கது இதைப்பற்றின விசாரத்வத
டிட்டோம்.

×த்ராணே
3 ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸ்வாமிதேசிகன் ப்ரதாநஹேது
ஸ்வாமித்வ மௌசித்யம் ந்யாஸாத்யாஸ் ஸஹகாரிண:, ஸர்வ
ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணவிபோ;× என்கிற காரிகையினல்
முக்தி ப்ரஸங்க வாதத்தைத் தள்ளி விட்டார்; ''த்ராணே ப்ரதாநஹேது:
கருணா'' என்றிவ்வளவே ஸாதித்திருந்தால் அந்த ப்ரஸங்கம் தலைகாட்டி
னுலுங் காட்டும்; கருணைக்கு ×ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா× என்று அற்புத
மான விசேஷணமன்றே கொடுத்திருக்கிறர், ×நாஸௌ புருஷ காரேண
நசாபி அந்யேந ஹேதுநா. கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே
கஞ்சித் கதாசந× என்ற பகவதுக்தியை மீறமாட்டாமல் அதையடி
யொற்றி (×ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா×) என்றருளிச் செய்தபின்பு, ஸர்வ
மென்றே முக்தியென்றே ப்ரஸங்கமென்றே வாய்திறக்க வழியுண்டோ?
ஸ்வாதந்த்ர்யமாவது என்ன? என்பதை முன்னம் தெரிந்து கொள்ள
வேணும்; ×நியோகபர்யநுயோக—அநர்ஹத்வம்—ஸ்வாதந்த்ர்யம்× என்
பர் சாஸ்த்ரஜ்ஞர்கள். நியோகமாவது—'நீ இதைச் செய்ய வேண்டும்'
என்று ஒருவர் கட்டளை யிடுதல். பர்யநுயோகமாவது ஏன் நீ இதைச்
செய்தாய்? என்று அதட்டுதல் இவையிரண்டுக்கும் இலக்கானவனல்
லன் எம்பெருமான். ×ஸ்வாதந்த்ர்யமைச்வரமபர்யநு யோஜ்யமாஹு:×
என்ற கூரத்தாழ்வான் ஸ்ரீஸூக்தியின் நிரங்குசஸ்வாதந்த்ரியமே வடி
வாகையாலே, ஸ்வாமி தேசிகன் ×ஸ்வாதந்த்ர்ய விசிஷ்டா கருணா
விபோ:× என்று தம்முடைய தார்க்கிககேஸரித்வத்தை அவிசால்யமாகக்
காட்டி யருளிச்செய்தாராயிற்று. இதுவும் முடிந்துபோன விஷயம்:

4. பகவத் கீதையில் (10-4) ×க்ஷமா ஸத்யம் தமச் சம:× என்ற
விடத்து பாஷ்யத்தில் "தம:—பாஹ்யகரணாநாம் அநர்த்த விஷயேப்யோ
நியமநம். சம:—அந்த: கரணஸ்ய சுதா நியமநம்'' என்று பாஷ்யகாரர்
நிகமனம் செய்தருளினர். மேல் பதினருமத்யாயத்தில் முதல் ச்லோகத்
தில் ×தாநம் தமச்ச யஜ்ஞச்ச× என்றும், அடுத்ந இரண்டாம் சுலோகத்
தில் ×த்யாகச் சாந்திரபைசுநம்× என்றுமுள்ளவிடங்களிலும் தமத்திற்கும்
சமத்திற்கும் விவரணமுள்ளது (கீதா) பாஷ்யத்தில். அந்த:கரண நிய
மநம் தமமென்றும், பாஹ்யகரண நியமநம் சமமென்றுமுள்ளதிங்கு. இது
முன்னங்காட்டிய விவரணத்தோடு முரண்படுகின்றது. இவ்விடத்துத்
தாத்பர்யசந்திரிகையில் ஸ்வாமிதேசிகன் என்ன அருளிச் செய்திருக்கிரு
ரென்ருல், "ஏதேந, கேஷாஞ்சித் அநயோ: சப்தயோ: வ்யுத்க்ரமேண
அர்த்தவ்யாக்யாநம் நிரஸ்தம்'' என்றருளிச் செய்துள்ளார். இது
சங்கரபாஷ்யத்துக்கு மட்டுமல்லாமல் பகவத்ராமாநுஜபாஷ்யத்துக்கு
மன்றோ ஸ்வஸ்பஷ்டகண்டனமாகவுள்ளது. ஸ்ரீராமாநுஜருமன்ரோ தச
மாத்யாயத்தில் வ்யுத்க்ரமேண வியாக்கியானமிட்டருளினர். அவ்விடத்
துத் தாத்பர்யசந்த்ரிகையில் ×பௌநருக்த்யபரிஹாராய× இத்யாதி
யாலே தாமே பணித்ததையும் மறந்தருளியன்ரோ ×நிரஸ்தம்× என்று
பகவத்பாஷ்யகாரஸூக்திநிராஸம் பண்ணியுள்ளார் ஸ்வாமிதேசிகன்.
இதற்குப் பரிஹாரமில்லையென்று முடித்திட்டார்கள்.
ஸ்ரீவசநபூஷணத்தில் "ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்''
என்றவிடத்திற்கு வியாக்கியானமருளிச்செய்யாநின்ற மணவாளமாமுனி
கள்—"சமமாவது அந்த;கரண நியமநம்; தமமாவது பாஹ்யகரண நிய
மநம். ×சமச்சித்த ப்ரசாந்திஸ்ஸ்யாத் தமச்சேந்த்ரிய நிக்ரஹ × என்னக்
கடவதிறே. ×க்ஷமா ஸத்யம் தமச் சம;× என்கிற விடத்தில் "தமோ
பாஹ்யகரணாநாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம்; சம: — அந்த;
கரணஸ்ய ததா நியமநம். என்றிறே பாஷ்யகாரருமருளிச்செய்தது:
மாறிச்சொல்லுமிடமுமுண்டு.'' என்றருளிச் செய்துள்ளார். விசதவாக்
சிகாமணிகளின் வாக்வைசத்யம் இங்ஙனே யன்ரோ இருப்பது. "மாறிச்
சொல்லவுமாம்'' என்னமல் "மாறிச்சொல்லுமிடமுமுண்டு'' என்ற
ஸ்ரீஸூக்தியின் ஸ்வாரஸ்யத்தை யறிவாருண்டோ? இதைப்பற்றின
சர்ச்சையையும் விட்டிட்டோம்.

5. ஆளவந்தாரருளிச் செய்த கீதார்த்தஸங்க்ரஹத்தில் (31) ×நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி:× என்ற சுலோகத்திற்கு தேசிகனருளிச்செய்த ரக்ஷையில் ×முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வ—அநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாதிதிபாவ:× என்கிற ஸ்ரீ ஸூக்திகளிருப்பதைப் பலகால் எடுத்துக் காட்டியிருக்கிறேன். இங்கு "முக்தவ்யாபாரந்யாயேந" இத்யாதிக்கு என்ன பொருளென்று பலகால் கேட்டிருக்கிறேன். இக்கேள்வியும் விடப்பட்டது, என்ன விடை யிறுக்கமுடியும்?

## —இப்போது நாம் விரும்புவது ஒன்றே—

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில்—"இப்படி நாராயணசப்தத்தில் ஸித்தமான குண விசேஷஸம்பந்த விசேஷங்களடியாகப் பிறக்குங் கலக்கங்களுக்குப் பரிஹாரமுதாஹரித்தோம்; இனி ... ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீமச்சப்தத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வருங் கலக்கங்களுக்கு திங்மாத்ரத்தாலே பரிஹாரம் காட்டுகிறோம். சிலர், த்வயத்தில் பூர்வகண்டத்தில் ஸ்ரீமச் சப்தம் உபலக்ஷணபரமென்றும், உத்தரகண்டத்தில் ஸ்ரீமச்சப்தம் விசேஷணபரமென்றும் பிரியச்சொன்னார்கள்; இவ்விடத்தில் சப்தம் ஏகரூபமாயிருக்க, ஸ்வாரஸ்யத்துக்கு பாதகமுமன்றிக்கேயிருக்க ... கூடஸ்தஸம்ப்ரதாய விருத்தமாகப் பண்ணுகிற இவ்விபாகம் அநுபபந்நம்" என்கிற பங்க்திகள் உள்ளன; ஸ்ரீமத்பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர் பணித்த ஸ்ரீஸாரபோதிநியென்னும் வியாக்கியானத்தில் இங்குக் கூசாமல் எழுதியிருப்பதாவது—"இந்த விசேஷணத்வ உபலக்ஷணத்வங்கள் ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டதுகள். இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்திலே ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை, சொல்லவும் முடியாது" என்று.

இங்குச் சிலர் ஹாஹாகாரம் பண்ணுகிறார்கள். இதனால், தேசிகனுக்கு அநுக்தோபாலம்பகர்த்ருத்வ தோஷமும் ✱அஸங்கதார்த்த ப்ரதிபாதகத்வதோஷமும் ஏறிடப்பட்டதாகிறது. ஸர்வஜ்ஞரும் ப்ராமாணிகருமான ஸ்வாமி தேசிகன் தாம் கண்ணால் காணாமல் சிலர் சொல்லி

யிருப்பதாக ஸாதிப்பரா? அக்காலத்திலிருந்த ஓலை ஸ்ரீகோசங்களை யெல்லாம் இவர் தாம் பார்த்திருப்பதாகச் சொல்ல முடியுமா? அதற்கு மேல் "சொல்லவும் முடியாது" என்றெழுதுகிறார். சொல்லியிருப்ப தாக தேசிகன் எழுதியுள்ளார். "த்ரிம்சத்வாரம் ச்ராவித சாரீரக பாஷ்ய:" [ஸங்கல்ப ஸூர்யோதயே ] முப்பது பர்யாயம் ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் செய்தருளின ஸ்வாமி தேசிகனுக்கு இவர் ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தைக் காட்டுவது வியப்பல்லவா? உபலக்ஷணத்வமாவது இன்னது என்பது தெரியாமலா தேசிகன் எழுதிவிட்டார்?

இஞ்சிமேட்டழகியசிங்கர் தாம் வியாக்கியானம் செய்யப் புகுந்த உயர்ந்த க்ரந்தத்திற்குத் தாமே குற்றங்குறைகூறுவது தகாது. பரிஹாஸ்யம்-என்று தெளிந்து, உடனே ஒருவழியாலே உரையிட்டுள்ளார். அதை அவரவர்கள் எடுத்துப்பார்த்துக்கொள்ளட்டும். பட்டர் அஷ்ட ச்லோகியில் த்வயார்த்த நிர்வாஹபரமாக அருளிச்செய்த—

ஈசாநாம் ஜகதாமதீசதயிதாம் நித்யாநபேதாம் ச்ரியம்
ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகிலகுணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே
இஷ்டோபாயதயா, ச்ரியாச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:

என்கிற ஆருவது சுலோகம் கண்ணாடிபோன்றுள்ளது; இதில் மூன்று வாக்கியங்கள் தெரிந்தனவா? 1 ச்ரியம் ஸம்ச்ரித்ய 2 ஹரேரங்க்ரீ இஷ்டோபாயதயா ஆச்ரயே. 3 ச்ரியாச ஸஹிதாய ஆத்மேச்வராய அசேஷம் தாஸ்யம் கர்த்தும் அர்த்தயே என்றிப்படி 3 வாக்ய யோஜனை களாகப் பணித்துள்ளார். முந்துற முன்னம் பிராட்டியைப் புருஷகார மாகப் பணிந்தமை சொல்லிற்று; பின்பு உபாயதயா எம்பெருமானைப் பணிந்தமை சொல்லிற்று; அதன் பிறகு இருவருமான சேர்த்தியிலே கைங்கர்ய ப்ரார்த்தனை சொல்லிற்று. உபாயதயா வரணம் எங்ஙனே சொல்லப்பட்ட தென்பதை உற்றுநோக்கவேணும். உபாயதயா ஆச்ர யணத்தைச் சொன்னவிடத்தில் ச்ரியாச ஸாஹித்யம் சொல்லிற்று? என் பதை நோக்கவேணும். இதை தேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரய ஸாரத் திலே சேமிக்கிறாரா? க்ஷேபிக்கிறாரா? என்பதை புத்திமான்கள் கண்டு பிடிக்கவேணும். உபலக்ஷண விசேஷணபதங்களையிட்டு இவ்வர்த்தத் தைக் கண்டிக்கிறார் தேசிகன் என்று க்ரஹியாமல் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழ

கிய சிங்கர் தமது ஸுபோதிநீவியாக்கியானத்தில் தேசிகன் ஏதோ
மருண்டு எழுதிவிட்டதாக நினைத்து "இப்படி ஏகதேசிகளும் சொல்ல
வில்லை, சொல்லவும் போகாது" இத்யாதிகளை வரைந்துள்ளார். அதை
யெல்லாம் ஆர அமர விமர்சித்து ஒழுங்குபடுத்தவல்லரோ நமது மதுராந்
தக நண்பர்? இதை யெல்லாம் விட்டு வேறொரு காட்டிலே பாய்ந்து
எதையேனும் கிளப்புவர்.

இதை நாம் இன்று புதிதாக எழுதுகிறோமல்லோம். நேற்று
வைகாசி மாதத்து ஸ்ரீராமாநுஜனில் [நெ. 382ல்] பரக்க எழுதியுள்
ளோம் "இஞ்சிமேட்டழகிய சிங்கர் மடத்து ஸம்ப்ரதாயஸ்தராகை
யாலே முநித்ரய ஸம்ப்ரதாயஸ்தர்களான நாங்கள் அதற்கு ஸமாதானம்
சொல்லவேண்டிய ஆவச்யகதையில்லை யென்னில்; வேண்டா. முநித்
ரய வியாக்கியானங்கள் பலவுண்டே; அவற்றையநுஸரித்தோ ஸ்வபுத்தி
யாலோ மூலத்தை நிர்வஹித்துவிடவேணும்.

ஸ்வாமிதேசிகன் ரஹஸ்யரத்நாவளியில்;

"ஸர்வஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷபூதை
யாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில்
வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தா
லும் புருஷகாரமாய்க் காண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமா
கிருள். இவளைப் புருஷகாரமாக்க வேண்டுகிறது ஈச்வரன்
தண்டதரனுகையாலே"

என்றருளிச் செய்துள்ள ஸ்ரீ ஸூக்திகளையும், சதுச்ச்லோகீபாஷ்ய
ஸ்ரீஸூக்திகளையும் சேர்த்துக் கொண்டு இந்தவொரு விஷயத்தை மட்
டும் ஸ்ரீமதுராந்தகவித்வான் பிறர் வாயைக்கையைத்திறக்க இடமில்
லாதபடி யெழுதியருள்வரேல் அடியேனுடைய ஜிஜ்ஞாஸைகளெல்லா
வற்றையும் பரிஹரித்தருளினதாகக் கொண்டு மகிழ்ந்திடுவேன்.

அடியேனுடைய ப்ரியஸுஹ்ருந்மணியும், ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில்
சாஸ்த்ரமதிகரித்தவருமான ஸ்ரீமதுமயவே. வீராடரம் சடகோபா ாரியர் மது
ராந்தகம்ஸ்வாமி மணவாளமாமுனிகள் திருவடிகளில் மிகவும் ப்ராவண்யமுடைய
ரென்பதைத் தமது அநுபவத்திறல் மூதலித்து 1–0–80ல் நேரில் வந்திருந்த
போது திடமாகச் சொன்னபடியால் அதை விச்வஸித்து அந்த சர்ச்சையை
முடித்துக்கொண்டேன். இப்போது ஒரே சர்ச்சையாக முடித்திட்டேன்.

# வால்மீகி மஹர்ஷியைப்பற்றி

கணக்கிலடங்காத மஹர்ஷிகளுள்ளார்கள். ரிஷிகளுக்குத் தபோதனர்களென்று பெமர். தபஸ்ஸையே தனமாகவுடையவர்களென்று பொருள்; தவஞ்செய்வதிலேயே ஊற்றமுடையவர்களென்றபடி. ×ஊன் வாட வுண்ணாதுயிர்காவலிட்டு உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து. தான்வாடவாடத் தவஞ்செய்யவேண்டா× என்றும், ×காயோடு நீடுகனியுண்டு வீசுகடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயூடுநின்று தவஞ்செய்ய வேண்டா× என்றுமுள்ள திருமங்கையாழ்வார் பாசுரங்களினால் தவம்புரியும் பெற்றியைத் தெரிந்து கொள்ளலாம். பிள்ளைப்பெருமாளையங்காருப் ×காயிலை தின்றுங்கானிலுறைந்துங் கதிதேடித் தீயிடைநின்றும் பூவலம்வந்தும் திரிவீர்காள்!× (திருவரங்கக் கலம்பகம்) என்கிற செய்யுளினால் தவவேடத்தைக் காட்டியுள்ளார். இங்ஙனே தவம்புரியும் முனிவர்கள் இக்காலத்திலுள்ளார்களாவென்று சிலர் கேட்கிறார்கள். நமக்குத் தெரியாவிட்டாலும் இமயமலை முதலானவிடங்களில் இருக்கக் கூடுமென்றே நினைக்கிறோம் ஒரு ஸமயம் நாம் நாஸிக்பஞ்சவடியில் சென்று திரிந்து பலவிடங்களிலும் பார்த்தபோது திருமங்கையாழ்வார் பெரியதிருமடலில் "வீழ்கனியுமூழிலையும் என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம் வருந்தித், துன்னுமிலைக்குரம்பைத்துஞ்சியும்" என்றருளிச்செய்த ரீதியில் ஜீர்ண பர்ணசனர்களாயிருந்து போதுபோக்கும் சில முனிவர்களைக் காண நேர்ந்தது அவ்வாழ்வார் தாமே "வெஞ்சுடரோன் மன்னு" முல் நுகர்ந்தும் வெண்தடத்தினுட் கிடந்தும்" என்றருளிச்செய்த படி வேனிற்காலத்தில் ஸூர்யகிரணத்தைப் புசித்துக்கொண்டும், மழை காலத்தில் தடாகத்தினுள் மூழ்கிக்கிடந்தும் தவம்புரியுமதிகாரிகளை இக் காலத்தில் காணமுடியாதென்றே தோன்றுகின்றது. இது கிடக்க;

வால்மீகி மஹர்ஷியைப்பற்றிச் சிறிது பேசுகிறேன். இவர்க்கு வால்மீகியென்றும் ப்ராசேதஸரென்றும் இரண்டு நாமதேயங்கள் ப்ரஸித்தமாக வழங்குகின்றன; வால்மீகி யென்கிறபதம் வல்மீகசப்தத்தின் மேல் தத்திதப்ரத்யயாந்தமாகத் தேறினதாகும் வல்மீகம்—புற்று. புற்றிலிருந்து தோன்றியவர் வால்மீகி. இனி ப்ராசேதஸரென்கிறபதம் "ப்ரசேதா:" என்கிற சப்தத்தின்மேல் தத்தித ப்ரத்யயாந்தமாகத் தேறியதாம்.

ப்ரசேதா: என்று வருணனுக்குப் பெயர். ப்ரசேதா வருண: பாசீ: என்று அமரகோசம். வருணனால் தோற்றுவிக்கப்பட்டவர் என்பது கருத்து. இம் முனிவர் தம்மை மறந்து ஸமாதியில் கிடந்தார், அப்போது புற்று மூடிவிட்டது. புற்றினுள்ளேயே கிடந்தார். பிறகு ஒருகால் மழைபெய்தது அதனால் புற்றுமண் கரைந்துவிடவே இவருடைய வடிவம் வெளிப்பட்டது மழைக்கு அதிஷ்டாநதேவதை வருணனாகையால் வருணனால் தோற்றுவிக்கப்பட்டாரென்ற காரணத்தினால் ப்ராசேதஸரென வழங்கப்பட்டார். ஆக புற்று மூடிக்கிடந்து மழையினால் வெளிப்பட்டவர் இம்முனிவர் என்றதாயிற்று. சக்ரவர்த்தி திருமகனார் வனவாஸஞ் சென்றபோது வால்மீகியின் ஆச்ரமத்திற்குச் சென்றதாக அயோத்யாகாண்டத்தில் கூறப்பட்டுள்ளது. அப்போது இராகவனுடைய பெருமையை இம் முனிவர் அறிந்திலர் போலும்! அந்த வான்மீகி வேறுவ்யக்தியென்றும் ஸ்ரீ ராமாயணமியற்றிய வான்மீகி வேறு வ்யக்தியென்றும் சிலர் சொல்லுகிறார்கள். இதை நிர்ணயிக்க ப்ரமாணம் தேடவேண்டும். ❁

## மஹாபுருஷரின் மறைவு

தென்னேரியகரம் என்னும் அக்ரஹாரத்தில் தோன்றி, டில்லிமாநகரில் உயர் பதவிகளை வகித்துப், பத்தெட்டு வருஷங்களாக ஸைதாபேட்டையில் வாழ்ந்து வந்த ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரியர் 12-9-80ல் ஸைதாபேட்டையில் தமது இல்லத்தில் ஆசாரியன் திருவடிசார்ந்ததை மிக்க வருத்தத்துடன் தெரிவிக்கிறோம். இவர் மஹாபுருஷரென்னத்தகுதி உடையார். லௌகிகத்திலும் வைதிகத்திலும் சிறந்த ஞானமுடையவர். மஹான்கள் மதிக்கும் சீலமுடையவர். இவருடைய ஸ்தானத்தைப் பூர்த்தி செய்யவல்லவரை எம்பெருமான் விரைவில் கற்பிக்க வேணும்

## சந்தாதாரர்களுக்கு நினைவூட்டுதல்.

என்ன எழுதுவதென்று தோன்றவில்லை. சந்தா செலுத்தாதவர்களுக்குப் பத்திரிகை நிறுத்தப்படுமென்று எழுதுங்காலம் கடந்து விட்டது. நிறுத்தப்பட்டுவருகின்றது.

இப்படிக்கு, மானேஜர்.